# தமிழகம்

சிறப்பு ஆசிரியர்: தவத்திரு குன்றக்குடி அடிகளார்

மலர் 5] சோபகிருது பங்குனி 26, 8—4—64 கிழமை இதழ். விலை – 10 காசுகள். [இதழ் 18



அப்பர் தரும் விருந்து

## வாழ்வின் கடமை

இறைவன் உமையொரு பாகனுக விளங்குகின்றான். அதன்பொருள் தவறுகண்ட பொழுது, ஒறுத்துத் திருத்தும் ஆண்மையோடு கலந்த கருணையும் அவனது திருமேனி என்பதாகும். இத்தகு பண்பை இளங்கோவடிகள் "கருணை மறவன்"—கருணை கலந்த மறத்தன்மை என்று பேசுகின்றார், இராமலிங்க அடிகள் "அப்பா அடிக்க அம்மா அணைப்பாள்" என்று உளங் குளிரப் பேசுகின்றார். இத்தகு இறைவனுடைய கடமை உயிர்களைத் தாங்குதல்—துன்ப உலகத்தில் சூழாமல் காப்பாற்றுதல்—இன்ப உலகில் நிலைபெறச் செய்தல். இது அவன் கடமை. அவன் நம்முடைய வழிபாட்டிற்காகவோ பிரார்த்தனைக்காகவோ இதனைச் செய்வதில்லை. அதுபோலவே, உயிர்களின் கடமை தொண்டு செய்தல். தொண்டே வாழ்வின் கடமை.

கடமை என்ற சொல் கடன் என்ற வழக்கிலிருந்து தோன்றியிருக்கலாம். கடன், கொடுக்கப்படவேண்டியது. உயிர்கள் தம்முடைய பரிணாம வளர்ச்சியில் பல்வேறு உதவிகளைப் பெற்றிருக்கிறது. அவற்றிற்குமாருகப் பலருக்குத் திருப்பிக் கொடுப்பது கடமை.

கடனைத் திருப்பிக் கொடுக்கும்போது, திருப்பிக் கொடுப்பவன் வட்டியை எதிர்பார்ப்பதுண்டா? எதிர்பார்ப்பதுதான் நியாயமா? அதுபோல

(12 ஆம் பக்கம் பார்க்க)

# வாழ்விக்க வந்தோர் வரலாறு

## 35. மூர்க்க நாயனார்

மன்னிப் பெருகும் பெருந் தொண்டை வளநாட்டில் தண்டலை சூழ் திருவேற்காடு என்னுந் திருப்பதியில் வேளாண் மரபில் தோன்றியவர் மூர்க்க நாயனார், அவர் பிறந்து வளர்ந்து அறிவு கொண்ட நாள் முதல், 'ஆதி முதல்வர் திருநீற்றின் அடைவே பொருள்' என்று அறிந்து, அரனடியார்க்கு அமுது செய்வித்த பின்னரே தாம் அமுதுண்ணும் நியதியை மேற்கொண்டார். அடியவர் தம் விருப்பம் அறிந்து வேண்டுவன கொடுப்பது அவர்தம் வழக்கம். இப்பணியை அவர் இனிதே மேற்கொண்டொழுகு நாளில் அடியவர் கூட்டம் நாளுக்குநாள் பெருகலாயிற்று. நாயனாருக்கு முன்னம் உடைமையாயிருந்த பொருள் அனைத்தும் செலவாயின. நிலம் முதலியவற்றை விற்றும் தம் திருத்தொண்டைத் தொடர்ந்து செய்துவந்தார். வறுமை உச்சநிலை எய்தியது. அடியவர்க்கு உதவ இயலாத நிலை நேர்ந்ததே என்று எண்ணி இதயம் நைந்தார்.

நாயனார் சூதாடுவதில் கை தேர்ந்தவர். தமக்குத் தெரிந்த அச் சூதாட்டத்தின் வாயிலாகவாவது பொருள் சேர்த்துத் திருத்தொண்டாற்ற எண்ணினார். திருவேற்காட்டில் தம்மோடு சூதாடுவோர் எவரையும் காணாமையின், அவர் வேறு பல திருப்பதிகட்கும் சென்று ஆங்காங்கு சூதாடுவார். அதன் வாயிலாகப் பெறும் பொருளால் அடியவர்கட்கு அமுது செய்விப்பார்.

நாயனார் திருக் குடந்தை நகரடைந்தார். அங்கும் சூதாடினார். பெரும்பொருள் பெற்றார். திருத்தொண்டைச் செவ்வனே செய்தார். சூதாட்டத்தில் முதலில் தோற்று, பின் ஆட்டங்களில் எல்லாம் அவர் வெற்றிபெறுவார். ஆட்டத்தில் மாறுபடுவோரைத் தமது உடைவாளால் குத்துவார். இவ்வாறு செய்தலினாலும் அவர் 'மூர்க்கர்,' என்னுந் திருப்பெயருக்குப் பொருத்தமுடையரானார்.

இவ்வாறு சூதாடிப் பெற்ற பொருளில் ஒரு சிறிதையும் தம் சொந்தச் செலவிற்குப் பயன்படுத்தமாட்டார். அப்பொருளைச் சமையல் செய்வோரிடம் கொடுப்பார். சமையற்காரர்கள் அவற்றைக்கொண்டு அமுதாக்குவர். அடியவரெல்லாம் அமுதருந்திய பின் நாயனார் கடைசிப் பந்தியில் அமர்ந்து அமுதருந்துவார். இவ்வாறு சில நாள் தொடர்ந்து தொண்டு செய்து, பூதங்கள் இசை பாடப் பொன்னரங்கில் ஆடுவார் புரம்புக்கார் மூர்க்கர். வள்ளுவர் கூறும் விருந்தோம்பற் பண்பிற்குத் தக்கதொரு விளக்கமானார் மூர்க்க நாயனார்.

★

## அடிகளார் சுற்றுப்பயணம்

ஏப்ரல், 1964.

11 சென்னை வில்லிவாக்கம்
12 சென்னை
13 ,,
14 திருவிளையாட்டம் தஞ்சை

## பொறுத்துக்கொள்க

எதிர்பாராத சில காரணங்களினால் இவ்வார இதழ் இரண்டு நாள் காலதாமதமாக வெளி வருகிறது. வாசக அன்பர்கள் பொறுத்துக்கொள்ளுமாறு கேட்டுக்கொள்கிறோம்.

—ஆ-ர்

## ஒருநாள் சம்பளம்

அண்மையில் மதுரை நகரில் ஏற்பட்ட பள்ளிக் கட்டிடவிபத்தில்பலியானவர்கள் குடும்பங்கட்கு ஆறுதல் தெரிவித்து, தவத்திரு அடிகளார் அவர்களின் பல்வேறு நிறுவனங்களிலும் பணி புரியும் அலுவலர்களும் தொழிலாளர்களும் தமது ஒரு நாள் சம்பளத்தை உதவியுள்ளனர்.

# தொண்டால் மனிதன் உயர்கிறான் தொண்டால் உள்ளீடு சிறக்கிறது

[திருச்சி அருள்நெறித் திருக்கூட்டத்தின் சார்பில் நடைபெற்ற "ஏழில் இருபது" என்ற முதல் தொடர்ச் சொற்பொழிவின் முன் தொடர்ச்சி]

அடுத்து, தொண்டின் நெறி நின்று, தொண்டின் சிறப்பை உலகிற்கு உணர்த்தினார் அப்பரடிகள். "தொண்டு செய்! தொண்டு செய்வதே மனிதனின் வாழ்க்கை! தொண்டலால் உயிர்க்கு ஊதியமில்லை" என்றார் அப்பரடிகள். உடம்பிற்கு ஊதியம் பணம், காசு முதலியன. உயிர்க்கு ஊதியம் தொண்டு ஒன்றுதான். தொண்டு செய்வதாலே மனிதன் உயர்கிறான் — அவனுடைய உள்ளீடு சிறக்கிறது. எனவேதான் 'தொண்டு செய்! தொண்டோடு பக்தி செய்!' என்றார்.

நாம் நடக்கும்போது வலக் காலை வைத்த உடன் இடக் காலை யோசித்தா எடுத்து வைக்கிறோம்? நாம் நடந்து செல்ல வேண்டும் என்று முடிவெடுத்துக் கொண்டதும் எப்படி வலது காலும், இடது காலும் மாறி மாறித் தொடர்ந்து இயல்பாக வைக்கப்பெறுகிறதோ அப்படியே வாழ்க்கையில் தொண்டும் பக்தியும் மாறி மாறி இயல்பாகவே நடைபெறவேண்டும். ஒரு கால் தொண்டு — இன்னொரு கால் பக்தி. இரண்டு கால்களாலும் நடக்கின்ற மனிதன் எப்படி தனது நடைப்பயணத்தை இன்பமாக — சிறப்பாக முடிக்கின்றானோ அப்படியே தொண்டையும், பக்தியையும் வாழ்க்கைக் குறிக்கோளாகக் கொண்டு வாழுகிற மனிதன், தன் வாழ்க்கையை இன்பகரமாக நடத்தமுடியும். அவன் வாழ்க்கை இன்ப வாழ்க்கையாகத் திகழும். இந்த உண்மையை மிக நன்றாக உணர்ந்தே நமது அப்பரடிகள் தொண்டின் வடிவமாக — தொண்டின் செல்வராகத் திகழ்ந்தார். 'என் கடன் பணி செய்து கிடப்பதே' என்றார்.

இன்று பணிசெய்வதிலும் கூடப் பலர், பலாபலன்களை கணக்கிட்டே செய்கின்றனர். பணிசெய்ய வேண்டும்; பலனை எதிர்பார்க்கக்கூடாது — என்றார். இத்தகு உயர்ந்த கொள்கைகள் பலவற்றை அப்பரடிகள் 7-ஆம் நூற்றாண்டிலேயே வலியுறுத்திச் சென்றிருக்கிறார். ஆம் நாம் வாழும் இந்த இருபதாம் நூற்றாண்டில், நாம் எவ்வெவற்றைப் புதுமைகள் என்று கருதுகிறோமோ, எவ்வெவற்றையெல்லாம் புதிய சிந்தனைகள் என்று எண்ணுகிறோமோ அவற்றையெல்லாம், ஏழாம் நூற்றாண்டில் இந்த நாட்டில் தோன்றிய அப்பரடிகள் மிகமிக அழகாக - ஆணித்தரமாகச் சொல்லிச் சென்றிருக்கிறார். 7-ம் நூற்றாண்டில் அப்பரடிகள் காண விரும்பிய சாதி குல பேதமற்ற — பொருளாதார ஏற்றத் தாழ்வற்ற — எல்லாரும் எல்லாப் பெருஞ் செல்வமும் பெற்று வாழ்கிற - அன்பாலே மக்கள் குலம் இணைந்து வாழ்கின்ற - தொண்டின் வழிப்பட்ட புதிய சமுதாயம் காணும் முயற்சியில் ஈடுபடுவோமாக என்று கூறி வாழ்த்தி விடைபெற ஆசைப்படுகிறோம். (முற்றும்)

## இசைமேதையின் மறைவு

குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீன நாதசுர வித்துவானும், பிரபல நாதசுர இசைமேதையுமான திரு. காருகுறிச்சி அருணாசலம் காலமானார் என்ற செய்திகேட்டுத் திடுக்குற்றோம். திரு. அருணாசலம், தமது இசைப் புலமையால் மிகச் சுருங்கிய காலத்தில் விரிந்த புகழ்பெற்று விளங்கினார். அன்னாரின் மறைவு தமிழக இசை உலகத்திற்கு ஈடுசெய்ய முடியாத பேரிழப்பாகும். மாமேதையை இழந்து மனம் கலங்குகிறது தமிழக இசையுலகம். புகழ் மிக்க குடும்பத் தலைவனை இழந்து தவிக்கிறது அவரது குடும்பம். மீளாத்துயரில் ஆழ்ந்துள்ள அவர்குடும்பத்தினர்க்கு நமது ஆழ்ந்த அனுதாபங்கள்!

—ஆசிரியர்

## பணி செய்யவேண்டும்; ஆனால் பலனை எதிர்பார்க்கக் கூடாது

கவியரங்கம்

# என் மலர்கள்

அண்மையில் 14—3—64ல் திருச்சி நூற்றுக்கால் மண்டபத்தில் நடைபெற்ற திருச்சிராப்பள்ளி அருள்நெறித் திருக்கூட்ட ஒன்பதாவது ஆண்டு நிறைவு விழாவையொட்டி அன்று பிற்பகல் அனைத்திந்திய தமிழ் எழுத்தாளர் பெருமன்றத்தின் செயலர் திரு. அ. வெ. ர. கிருஷ்ணசாமி ரெட்டியார் தலைமையில் கவியரங்கம் ஒன்று சிறப்பாக நடைபெற்றது. கவிஞர்கள் எண்மர் இறைவழிபாட்டிற்குரிய எண்மலர்களைப் பாமாலையாக்கி வழிபட்டனர். அரங்கின் தலைவராகத் திகழ்ந்த திரு அ. வெ. ர. கிருஷ்ணசாமி ரெட்டியார் அவர்களின் கவிதை மலர் (முன்னுரை) இங்கே மணம் பரப்புகிறது.

—ஆசிரியர்

### மணிவாசகர் துதி

அருள்வடிவே அன்புருவே அமுத ஊற்றே
ஆனந்தக் காட்சிகண்ட அருள்ஞானக் குன்றே
திருவண்டப் பகுதிதந்த திருவாத வூர
செந்தமிழ்செய் தவத்தாலே வந்திட்ட மூர்த்தி
திருவாசக மென்னும் தெய்வமறை தந்த
தேசிகனே எனையாண்ட தேவ தேவ
குருமணியே தவக்கனலே உன்கழல்கள் போற்றி
கொஞ்சுதமிழ்ப் பாமாலை சூட்டிடுவேன் போற்றி

செந்தமிழும் உன்தமிழால் தெய்வநலம் பெற்று
தேடறிய எம்பெருமான் திருக்கழல்கள் தம்மை
சிந்தித்துயாம் அமுதால் பெற்றிடா மென்று
தெய்வ நெறிகாட்டிஎமைக் காத்திட்ட தேவ
வந்திங்கே வழிகாட்டி எமையாண்ட நாத
வாதவூர் வந்திட்டமணி வாசகனே உன்னை
சந்ததமும் போற்றி உனைத்தொழுதடி பணிந்தே
தமிழ்மாலை சூட்டிடுவேன் குருமணியே போற்றி.

வான்கலந்த வாசகனே வாதவூர் தேவ
வாசகத்தை எமக்களித்த மாமணியே நாத
தேன்கமழும் வாசகத்தால் சிவபெருமான் தன்னை
சிக்கெனவே பிடித்தெமக்குக் காட்டவந்த மூர்த்தி
ஊன்கலந்து உயிர்கலந்து உன்தமிழை ஓதி
ஓயாது அழுதரற்றி ஒருமுகமாய் நிற்கத்
தான்கலந்து எம்முள்ளே வழிநடத்த வேண்டும்
சற்குருவே சரணமடைந்தேன் தாளினையே காப்பு

### சிவபெருமான்

உலகமெலாம் தன்இறைவன் என்றே கூவ
உயர்தமிழில் சிவமாகி நிற்கும் தேவ
அலகில்லா விளையாட்டை ஆடி நின்று
அகிலமுதல் அனைத்துயிரும் ஆனய் போற்றி

தூத்துக்குடி

## இளைஞர் அருள்நெறி மன்றம்

தூத்துக்குடி இளைஞர் அருள்நெறி மன்றத்தின் உறுப்பினர் கூட்டம் 22-3-64 ஞாயிறு பிற்பகல் 'ஓட்டல் ரோமாவில்" திரு. டி. எஸ். இராமசாமி தலைமையில் நடைபெற்றது. திரு. ஏ. என். ரவீந்தரன், பி. ஏ. அனைவரையும் வரவேற்றார்.

அருள்நெறி மன்ற அமைப்பு விதிகள், 12-1-64ல் மத்திய செயற்குழுக் கூட்டத்தில் நிறைவேற்றப் பெற்ற தீர்மானங்கள் முதலியவைகளை திரு. தரும ராமச்சந்திரன் திரு. சி. நடராஜன் ஆகியோர் வாசித்தனர்.

(1) "சமயத்தை வளர்த்து. சமுதாயத்தைக்காக்க தோன்றியவைகள்தான் திருமடங்கள். அத்தகைய திருமடத்தின் தலைவர்கள் அனைவரும் ஒன்றுகூடி, சமயப்பேரவை நடத்தி சமயத்தையும், சமுதாயத்தையும் வாழ்விக்க வர வேண்டும்" என்றும்,

(2) "திருக்கோவில்களில் ரத்தப் பலியிடுதல் இறைத்தன்மையை மாசுபடுத்துவதாகும். அரசு சட்டம் இயற்றியிருந்தாலும் அதனை சரிவர அமல் நடத்தாதது கண்டு கூட்டம் வருந்துகின்றது. எனவே ரத்தப் பலியிடும் திருக்கோவில்களில் அரசு தலையிட்டுத் தடுத்து நிறுத்தும்படி கேட்டுக்கொள்கின்றது" என்றும்,

(3) 'ஜாதியை அடிப்படையாகக் கொண்டு இயங்கும் திருக்கோவில்களில் அரசு தலையிட்டு ஜாதீய உறவை அகற்ற வேண்டுமெனக் கேட்

(அடுத்த பக்கம் பார்க்க)

குலம்பாடி மணிவாசகன் தன்புகழைப் பாடும்
கோக்கவிஞர் சைவநெறி குலத்து வந்தோர்
சிலம்பாடல் பலபாடி தெள்ளேணம் கொட்டுவார்
சிவபெரும அரங்கிற்கே வருகை தாராய்!

தத்துவங் கடந்த மெய்த்தவப் பொருளே
தாயுமாய் வந்த எம் பெரும
சத்தென விளங்கும் தவமணி வாசகன்
தமிழ்க் கவி காட்டிடும் வழியில்
உத்தமக் கவிஞர் எண்மர்கள் இங்கு
உன்புகழ் பாடிட விரைந்தார்
சித்துருவான திருசிரகிரியின் செல்வமே சிவபெருமானே
சத்தியக் கவிதை கேட்டிட இங்கு சங்கரா எழுந்தருளாயே!

விண்ணகத்துத் தேவர்களும் காண தேங்கும்
மெய்ப்பொருளே சத்தியமாய் விளங்கும் தேவே!
மண்ணகத்தில் மணிவாசகரின் வாக்கிற் காக
வந்திறங்கி பிரம்படியும் பட்ட நாதா
பண்ணிறைந்த பைந்தமிழ்க் கவிஞர் எண்மர்
பாடி உனை எண்மலரால் துதிக்க வந்தார்
எண்ணமெனும் விடையேறி எம்பெருமான் இங்கே
எழுந்தருளி வாழ்ந்திடுவாய் கழல்கள் போற்றி!

பூதங்கள் தோறும் தோன்றி இவ்வுலகை
பெரும நீ நடத்திடு கின்றாய்
வேதங்கள் யாவும் உன்புகழ் பாடி
விமலனே துதித் தவை நிற்கும்
கீதங்கள்பாடி ஆடிடும் அடியார்
கிளர்ந்திடும் உளத்திலே அமர்ந்து
நாதனாய் ஒளிரும் சிவபெரு மானே
எங்கள் நாக்கிலும் வாக்கிலும் வருவாய்!

வாசகரின் வாசகத்தால் கண்டோம் உன்னை
வாக்கிறந்த பூரணத்தின் வடிவாய் நிற்கும்
நேசர்களின் மனத்தினிலே கோவில் கொண்டு
நிமலனே சிற்சபையில் ஆடும் தேவ
பாசத்தால் பாதமலர் பற்றி நின்று
பாடி உனைத் தேடியே கூடிவந்தோம்
வாசகத்தின் உட்கருத்தாய் நின்று எங்கள்
வாக்கினிலே ஆனந்தக் கூத்தாட வாராய்!

### குன்றக்குடி அடிகளார்

தமிழகத்து விவேகானந்தப் பெருஞ்ஜோதி என்ன
தான்விளங்கும் தவத்திரு அடிகளார் பெரும!
அமிழ்தினும் இனியதமிழ் எம்மனத்தே கொட்டி
அருள்நெறியைப் பரப்பிவரும் குருமணியே சரணம்
தமியேனின் உள்ளத்தே தனியிடமே கொண்ட
தவமணியே! குருமணியே! தமிழ்ச்சுடரே! வருக!
தமிழ் எழுத்தாளர்களின் துணைத்தலைவ! வருக
தமிழ்க்கவி யரங்கினையே அலங்கரிக்க வருக!

(8ஆம் பக்கம் பார்க்க)

(முன்பக்கத் தொடர்ச்சி)

டுக்கொள்கிறது.'' என்றும், தீர்மானங்கள் நிறைவேற்றப் பெற்றன.

பின் புதிய செயற்குழு ஏக மனதாகத் தேர்ந்தெடுக்கப் பெற்றது. செயற்குழு பின் வருமாறு:

தலைவர்:- திரு டி. எஸ். ராமசாமி, உப-தலைவர்:— திருஏ.பி.சி.வீ. சொக்கலிங்கம் (மாணவர், வ.உ.சி.கல்லூரி) செயலாளர்:- திரு சி. நடராஜன் (பி. எஸ்ஸி.) உதவி செயலாளர்:- திரு எம். என். ரவீந்தரன், பி.ஏ., பொருளாளர்:- திரு ஏ. எம். எம். எஸ். ஜி. வெற்றிவேல் (மாணவர், தியாகராஜர் பொறியியல் கல்லூரி, மதுரை,) உறுப்பினர்கள்:- திரு தரும ராமச்சந்திரன், பி. காம்., திரு ஏ. என். கண்ணன், முதல் பி. காம்., திரு ஏ. ராதாகிருஷ்ணன், திரு சிவ. ராமச்சந்திரன் (பி. காம்) திரு. எஸ். ராமுலு, திரு. ஏ. எஸ். எஸ். சம்பந்தம், (பி. எஸ்ஸி)

சேரிகளுக்குச்சென்று சமூக நல வேலை செய்வதற்கென, திருவாளர்கள். தரும ராமச்சந்திரன், பி.காம், வி. லட்சுமணன், இரா. சண்முகசுந்தரம், சி. நடராஜன், சிவராமச்சந்திரன் ஆகியோர் அடங்கிய ''ஐவர் குழு'' ஒன்று ஏற்படுத்தப்பட்டது.

பின்னர் தேநீர் விருந்து நடைபெற்றது. திரு. சி. நடராஜன் நன்றி கூறினார்.



# தமிழகம்

அன்பாலே மக்கள்குலம் இணைந்து வாழும்
அருள்நெறியைப் பரப்புதலே எங்கள் நோக்கம்

மலர் 5] 8—4—64 [இதழ் 18

## மனம்படைத்தோர் வருக

"நாடென்ப நாடாவளத்தன" என்றார் திருவள்ளுவர். நாட்டில் வாழும் மக்கள் அனைவரும்—இன்றியமையாத் தேவைகள் கிடைக்கப்பெற்று இனிது வாழும் நாடே நல்ல நாடு. அத்தகு நாட்டிலேயே சிந்தனையின் செழிப்பும் சமய ஞான அனுபவமும் தழைக்க முடியும். இத்தகு சமுதாய அமைப்பையே சோசலிச சமுதாய அமைப்பு என்று கூறுகிறோம். சோசலிச சமுதாய அமைப்பை கற்பனையாலோ தீர்மானங்களாலோ மட்டும் உருவாக்க முடியாது. சோசலிச சமுதாய அமைப்புக்குரிய ஊற்றுக் கண்கள் ஒற்றுமை-உழைப்பு-அளவுக்கு மீறிய தன்னலமின்மை ஆகியன.

நாட்டு மக்களிடத்தில் நாம் பாரத நாட்டின் ஒரு குல மக்கள் என்ற உணர்வைத் தவிர சாதி, மத, மொழி வகையான எந்தவிதமான உணர்வுகளும் இருத்தல் கூடாது. உணர்ச்சி பூர்வமான ஒரு கூட்டுக் குடும்ப உணர்வு மேலோங்கும்படி செய்யவேண்டியது அவசியம். அத்தோடு, சமுதாயத்தின் தீய சக்திகளாக விளங்கும் வகுப்புவாதம், ஏகபோகம், பிரிவினைசக்திகள்-இவைகளைசமுதாயத்திற்கு இனங்காட்டி, தனிமைப் படுத்தி, ஒதுக்கி அழித்தாக வேண்டும். நல்லது வளர தீமை அழிய வேண்டும். இந்த வேலையை கிராம மட்டத்திலிருந்து நாட்டு மட்டம் வரை சாதித்து மக்களை ஓரணியில் திரளும்படி செய்யவேண்டும்.

பாலைத்தராமல் வயிற்றில் ஒடுக்கும் மாடு நல்லதல்ல. அதுபோலவே, சமுதாயத்தின் ஒரு உறுப்பினனாகிய மனிதன் உழைப்பின் சின்னம். மனிதப் படைப்பின் நோக்கமே ஆர்வம் நிறைந்த உழைப்பினால் இந்த மாநிலத்தைப் பயன்படுத்தி பயனுறுவதுதான். உழைக்காமல் இருப்பது பாவம் என்ற தத்துவம் மக்களிடத்தில் வளர்ந்து கால் கொள்ளும்படி செய்தல் வேண்டும்.

உழைப்பினாலன்றிச் செல்வம் வராது. செல்வச் செழிப்பின் ஊற்றுக்கண், மகிழ்வோடும் கடமை உணர்வோடும் திட்டமிட்ட வகையில் உழைப்பதேயாகும். உழைக்கும் சக்தியை வீணாக்குவது சமுதாய ரீதியிலும் சமய ரீதியிலும் தவறு. ஆதலால், பரம்பரைச் செல்வ உரிமையின் பேராலும் சோம்பேறித்தனத்தின் காரணமாகவும், தேங்கிக் கிடக்கும் உழைப்பாற்றலைக் கிளறிவிட்டுப் பயன்பெறச் செய்யவேண்டும்.

உழைப்பினால் செல்வம் தோன்றும். அந்தச் செல்வத்தின் பலாபலன்களை யார் அனுபவிப்பது? உழைப்பாளி மட்டுமா? உழைக்க முடியாதவர்களும் சேர்ந்தா? உழைப்பிலும் பலவகையுண்டு. நேரடியாக உற்பத்தியில் பங்கு பெறுபவர்கள் - மறைமுகமாக உற்பத்தியில் பங்கு பெறுபவர்கள். ஆக, நாட்டிலுள்ள அனைவருமே செல்வத்தின் பயனைத் துய்த்து மகிழ வழிவகை காண வேண்டும். தற்போதைய சமுதாய அமைப்பு வல்லான் வகுத்ததே வாய்க்கால் என்ற நிலையில்தான் இருக்கிறது. உழைப்பாளிகளுக்கும் உற்பத்திக் கேந்திரங்களுக்கும் நேரடி உறவு இல்லை. இடைவெளியில் "உரிமையாளர்" உலகம் இருக்கிறது. உரிமையாளர் என்ற அளவிலேயே உற்பத்தியைப்பெருக்கும் உழைப்பாளியைவிட உரிமையாளர் அதிகப் பலனை அனுபவிக்கின்றார். இதன் காரணமாக உரிமையாளர் உலகம் உழைப்பினின்று விலகுகிறது. உழைப்பாளி வர்க்கம் முழுப்பலனும் தரற்கின்மையின் காரணமாக உற்பத்திப் பெருக்கிலும் ஏனோ தானோ என்ற மனோபாவம் குடி கொண்டிருக்கிறது. இப்பெருந் தீங்கிலிருந்து சமுதாயத்தை விடுதலை செய்ய வேண்டுமானால், ஒவ்வொரு மனிதனும் பாராட்டத்தக்க அளவிற்கு தன்னலத்திற்கு வேலி அமைத்துக் கொள்ள வேண்டும். தான் வாழ

(11-ம் பக்கம் பார்க்க)




# சோஷலிச சமுதாயத்தின் அடிப்படை

தவத்திரு குன்றக்குடி அடிகளார்

திருக்குறள் முற்போக்குக் கருத்துக்களையுடைய ஒருபழம் பெரும் புதுநூல். இன்று மக்கள் மன்றத்தில் எல்லாரும் எல்லாப் பெருஞ் செல்வமும் எய்தி வாழக்கூடிய சமநிலை சமவாய்ப்புச் சமுதாயத்தைப் பற்றிய கருத்து ஓங்கி வளர்ந்து வந்திருக்கிறது. இக்கருத்தின் வழி உற்பத்திக்களன்களும், செல்வப் பெருக்கிற்குரிய ஊற்றுக்களன்களும் அவ்வவ்வுழைப்பைச் சார்ந்தவர்களுக்கு உரிமைப்படுத்தப் பெற வேண்டும் - அல்லது (தேசிய மயம்) நாட்டிற்குப் பொதுவாக்கப் பெற வேண்டும் என்ற கருத்து மேலோங்கி வருகிறது.

செல்வத்தைப் பங்கிட்டுக் கொடுப்பதோ, சமைத்த பண்டங்களைப் பங்கிட்டுக் கொடுப்பதோ முன்னேற்றமடைந்த சமநிலை சமவாய்ப்புச் சமுதாயத்தைத் தோற்றுவித்துவிடாது. அடிப்படை மாறுதல் செல்வத் தோற்றத்திற்குரிய களன்களிலேயே ஏற்படவேண்டும். இத்தகு புரட்சி நிறைந்த கருத்தினை இன்றைக்கு இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னமேயே திருவள்ளுவர் கூறியிருக்கிறார்.

''பகுத்துண்டு பல்லுயிர்
ஓம்புதல் நூலோர்
தொகுத்தவற்றுள் எல்லாம்
தலை''

என்பது வள்ளுவர் வாய்மொழி. பகுத்துண்டல் என்றசொற்றொடரை பகுத்து உண்டல் என்று பிரித்தே பொருள் காணல் வேண்டும். உண்ணும் பொருளைப் பகுத்துண்ணலையே வள்ளுவர் கருதிக் கூறியிருப்பார் என்று நினைத்தற்கில்லை. உண்ணும் பொருளைப் பங்கிட்டுச் சாப்பிடுவதின் மூலம் பல உயிர்களை நீண்ட நாட்களுக்குப் பாதுகாக்க முடியாது.

'பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல்' என்ற குறளில் விளங்கும் விழுமிய நெறிகள் மூன்று. அவை பகுத்தல், உண்ணல், பாதுகாத்தல் என்பன.

**பகுத்தல்** என்பது முன்னர் கூறப்பெற்றது போல செல்வம் தோன்றற்குரிய நிலைக்களன்களையும், அவ்வழிப்பெருகும் செல்வங்களையும் பகுத்தலேயாம்.

**உண்டு** என்பது செல்வத்தின் பயன் முறையாக வாழ்க்கையை அனுபவிப்பது என்ற குறிப்பில் கூறப்பெற்றிருத்தல் வேண்டும்.

அடுத்த நெறி **'ஓம்புதல்'**. அதாவது பல உயிர்களையும் நிரந்தரமாகப் பாதுகாப்பது. இது மனித உலகத்தின் கடமை. இக்கருத்து வைப்பே சோஷலிச சமுதாயத்தின் அடிப்படை, இந்தச் சோஷலிச சமுதாயத்தின் அடிப்படையை நமக்கு உணர்த்தும் குறட்பாவை மீண்டும் ஒருதடவை பார்க்கலாம்:

**பகுத்துண்டு பல்லுயிர்
ஓம்புதல் நூலோர்
தொகுத்தவற்றுள் எல்லாம்
தலை.**

---

## அகிலனுக்குப் பொன்னாடை

'வேங்கையின் மைந்தன்' என்ற நூலுக்காக சாகித்ய அகாதெமி பரிசு பெற்ற நாவலாசிரியர் திரு. அகிலன் அவர்களுக்கு சென்னை சிந்தனையாளர் மன்றம் 25-3-64ல் நவசக்தி ஆசிரியர் திரு. ரா. வேங்கடராஜுலு தலைமையில் ஒரு பாராட்டு விழா நடத்தியது.

திருவாளர்கள் சுகி. சுப்பிரமணியம், கு. அழகிரிசாமி, கவி கம்பதாசன் மற்றும் பலர் அகிலனைப் பாராட்டினார்கள்.

தவத்திரு அடிகளார் அவர்கள் திரு. அகிலனுக்குப் பொன்னாடை போர்த்தி வாழ்த்துரை வழங்கினார்கள். திரு. அகிலன் பாராட்டுக்கு நன்றி தெரிவித்துப் பேசினார்.

(5ஆம் பக்கத் தொடர்ச்சி)

### திறப்பாளர்

சாந்தலிங்க அடிகளார் தமிழ்க் கல்லூரித்
தனித்தலைவ! தவத்திருவே! தமிழ்மணியே போற்றி
போந்திங்கே கவியரங்கின் தொடக்கவுரை யாற்றி
பொன்னுரையும் இன்னுரையும் பொழிந்திட்ட பெரியீர்
மாந்தருக்குள் மாணிக்கம் மணிவாசகராம் எங்கள்
மாதவத்துப் பரமகுரு வழிபாட்டின் தன்மை
தீந்தமிழில் எண்மலராய் கவிபாலை சூட்ட
தொடக்கிவைத்த அடிகளுக்கு சிரம் தாழ்த்துவோமே.

### கவிஞர்கள்

சிந்தையிலே கோயில்கொண்ட சிவபெருமான் தன்னை
தேடியவன் பாதமலர் போற்று தற்கே
வந்திட்ட பிறவியிதில் அறிவன்புபொறை வாய்மை
மாபுலன்கள் தாமடக்கம் உயிர் கொல்லாமை
சிந்திட்ட தவம் அருளல் எண்குணத்தை எம்பெருமான்
திருவடிக்கே மலர்களென செறிந்து போற்ற
வந்திட்ட சிவநேயச் செல்வர்களே! மாபுலவீர்
மாசக்தி வரம்பெற்றகவிஞர்களே வணக்கம் வாழி!

### அவையினர்

சிவநேயச் செல்வர்களே
செந்தமிழின் தவப்புதல்வீர்
திருவாசக மென்னும்
தேன்துளியைத் தம்மனதில்
ஒருமுறையேனும் தேக்கி
உயர்ந்தோரே! குருமணியின்
தீதில்லா செந்தமிழைத்
திருவாசகப் பொருளை
ஓதி உணர்ந்தோரே
உணர்வால் அனுபவித்து
போதித்து ஞானிகளாய்
புவியில் அமரர்களாய்
சாதித்த மேலோரின்
சந்ததியின் தவக்கொடியாய்
வாழப் பிறந்திட்ட
மாமணிகாள்! மாதவத்தீர்
தங்கள் திருவடிக்கே
தலைதாழ்த்தி வணங்குகிறேன்.

### முன்னுரை

கல்லடியும் வில்லடியும் வழிபாடாகக்
கருதியங்கே வரமளித்த கருணைமூர்த்தி
வில்லமதும் வெள்ளெருக்கும் மலராயஏற்று
விமலனார் அகமகிழ்ந்து காதையுண்டு

(11-ம் பக்கம் பார்க்க)

## இரங்கற் செய்தி

மானிட வாழ்க்கை பெறுதல் அருமையினும் அருமை. எண்ணரிய இலட்சியங்களையுடையது. அத்தகு பேறு பெற்றவர் பலர் திடீரென இலட்சியத்தில் அக்கறையின்மையின் காரணமாக இறந்துபடுகின்றனர் என்பது வேதனைக்கு உரிய செய்தி.

மதுரையில் பள்ளிக்கட்டிடம் இடிந்து வீழ்ந்தமையின் காரணமாகப் பல குழந்தைகள் இறந்திருப்பது பெரிதும் வருத்தத்திற்குரியது — இரங்கத் தக்கது.

ஏழைமையில் செல்வ வாழ்க்கை வாழவேண்டும் என்ற விருப்பத்தின் கோளாறே இது. மூன்றடுக்கு மாடிகட்டுவது என்பது சாதாரண காரியமல்ல. பள்ளியைக் கட்டியவருக்கு அதற்குரிய சூழல் இல்லை என்பது வெளிப்படை. சாதாரணக் கட்டிடமாகவே கட்டிப் பள்ளி நடத்தியிருந்தால் இத்தகையதொரு இரங்கத்தக்க நிகழ்ச்சி ஏற்பட்டிருக்காது. நடந்தது நடந்தபிறகு காரணங்களைக் கண்டுபிடித்துக் கொண்டிருப்பதில் பயனென்ன? இனி மேலாவது பொதுவாழ்வில் ஈடுபட்டிருப்பவர்கள் தம் சக்திக்கு உரிய முறையில் நடந்து கொள்வதோடு நாணயமாகவும் ஒழுங்காகவும் நடந்து கொள்ளவேண்டும்.

இறந்து போன குழந்தைகளின் ஆன்மா சாந்தியடைய நமது பிரார்த்தனை, அவர்களின் பெற்றோர்களுக்கும் குடும்பத்தினருக்கும் நமது ஆழ்ந்த அனுதாபம்.

—அடிகளார்

# செய்திகள்

## கட்டளை உயர்நிலைப்பள்ளி இலக்கிய மன்றம்

கட்டளை, கழக உயர்நிலைப் பள்ளி இலக்கிய மன்ற ஆண்டுவிழா 18-3-64ல் முன்னாள் சட்டமன்ற உறுப்பினர் திரு. மாணிக்க சுந்தரம் தலைமையில் நடைபெற்றது. வாழ் வாங்கு வாழ்தல், - என்ற தலைப்பில் தவத்திரு அடிகளார் அவர்கள் அரியதோர் உரையாற்றினார்கள்.

கரூர் பசுபதீஸ்வரர் கோயிலில் 18-3-64ல் நடைபெற்ற சமயச் சொற்பொழிவுக் கூட்டத்தில் 'பசுபதீஸ்வரர்' என்ற தலைப்பில் தவத்திரு அடிகளார் அவர்கள் சிறந்ததொரு சொற்பொழிவாற்றினார்கள்.

## அரங்கநாதர் பேட்டை க. உயர்நிலைப் பள்ளி

அரங்கநாதம் பேட்டை கழக உயர்நிலைப்பள்ளி திருவள்ளுவர் மாணவர் இலக்கிய மன்றச் சிறப்புக்கூட்டம் 19-3-64ல் நடைபெற்றது. 'இலக்கியம் வளர்த்த மகளிர்' என்பது பற்றி தவத்திரு அடிகளார் அவர்கள் சிறந்ததொரு சொற்பொழிவாற்றினார்கள். தலைமை ஆசிரியர் திரு. பா. ஊர்துசாமி கூட்டத்திற்குத் தலைமைவகித்தார்.

## அஞ்சல் அலுவலக ஊழியர் கூட்டம்

"சாதி உணர்வை ஒழிக்காதவரை தமிழர்களும் தமிழ் நாடும் முன்னேற முடியாது. உண்மையில் மனிதசமுதாயத்தில் எல்லாரும் ஓர் குலம், எல்லாரும் ஓரினம். இதில் எந்த வேறுபாடும் இல்லை. இருக்கக்கூடாது" என்று கரூர் வட்ட அஞ்சல் அலுவலக ஊழியர்கள் கூட்டத்தில் பேசுகையில் தவத்திரு அடிகளார் அவர்கள் குறிப்பிட்டார்கள். மேற்படி கூட்டம் திரு. திருஞான சம்பந்தம் தலைமையில் நடைபெற்றது.

## திருப்புத்தூரில் பள்ளிக் கட்டிடத் திறப்பு விழா

தவத்திரு அடிகளார் அவர்கள் தலைமையில் கால்கோள் செய்து வைக்கப் பெற்ற திருப்புத்தூர் திரு. ஆறுமுகம்பிள்ளை மாவட்டக் கழக ஆண்கள் உயர்நிலைப் பள்ளிக் கட்டிடத்தை 22-3-64 தமிழக முதலமைச்சர் மேதகு எம். பக்தவத்சலம் திறந்து வைத்தார். அமைச்சர் மேதகு வி. இராமையா விழாவிற்குத் தலைமை வகித்தார். மாவட்டத் தண்டல் நாயகம் திரு. அம்பாசங்கர் தேசீயக் கொடியை ஏற்றிவைத்தார். திரு. நா. ஆறுமுகம் பிள்ளை அனைவரையும் வரவேற்றார்.

தவத்திரு அடிகளார் அவர்கள் வாழ்த்துரை வழங்குகையில், திரு. ஆறுமுகம் பிள்ளையின் ஆர்வத்தைப் பாராட்டி, அவர்தம் ஆர்வத்திற்கும்முயற்சிகளுக்கும் அனைவரும் ஆதரவுதந்து ஒத்துழைக்கவேண்டுமென்றார்கள்.

திரு. கணேசன் அனைவர்க்கும் நன்றி கூறினார்.

## குன்றக்குடி அடிகளார் உயர்நிலைப்பள்ளி ஆண்டு விழா

"உடலை வளர்க்க உணவு எப்படித் தேவைப்படுமோ அப்படி உள்ளத்தைத்திருத்தியமைக்கக் கல்வி தேவைப்படும். மனத்தைத் திருத்தியமைக்கும் மகத்தான சக்தி கல்விக்கு உண்டு"

- என்று 24-3-64ல் நடைபெற்ற குன்றக்குடி, அடிகளார் உயர்நிலைப் பள்ளி ஆண்டுவிழாவிற்குத் தலைமை வகித்த இராமநாதபுர மாவட்ட உயர் நீதிபதியும், அருள்நெறியாளருமான திரு. டி. எஸ். இராமலிங்கம் கூறினார். காரைக்குடி நகரசபைத் தலைவர் திரு எஸ். முத்தையா செட்டியார் தேசீயக்கொடியை ஏற்றிவைத்தார். தேவகோட்டை நகரசபைத்தலைவர் திரு. எஸ். எம். எம். சுப்பிரமணியன் செட்டியார் அருள்நெறிக்கொடியை ஏற்றிவைத்தார். தமிழாசிரியர் திரு. அ. கு. சண்முகசுந்தரம் அனைவரையும் வரவேற்றார். தலைமை ஆசிரியர் திரு. அ. சோமசுந்தரம் முதலியார் பள்ளியின் ஆண்டறிக்கையைப் படித்தார். தேவகோட்டை கோட்டாட்சித் தலைவர் திரு. எஸ். காளை விழாவைத் தொடக்கி வைத்தார்.

பள்ளி மாணவர்கள் மாணவியர்கள், ஆசிரியர்களின் கருத்தோவியங்கள் நிறைந்த பள்ளி ஆண்டுமலரை கிழக்கு இராமநாதபுரம் மாவட்டக்கல்வி அதிகாரி திரு. இராம. நாட்டராயன் வெளி

யிட்டு, மாணவ மாணவியரைப் பாராட்டினூர்.

அறநிலையப் பாதுகாப்புத் துறை உதவி கமிஷனர் திரு. T. H. விவேகாநந்தம் பிள்ளை மாணவ மாணவியர்களுக்குப் பரிசுகள் வழங்கினுர்.

தவத்திரு அடிகளார் அவர்கள் வாழ்த்துரை வழங்கினுர்கள். அதன்பின், பள்ளி மாணவ மாணவியரின் கலை நிகழ்ச்சிகள் கண்ணுக்கும் கருத்துக்கும் விருந்தாய் அமைந்திருந்தன. தலைமைத் தமிழாசிரியர் திரு. க. கதிரேசன் அவர்க்கும் நன்றிநவின்ருர். நாட்டு வாழ்த்தோடு விழா இனிது நிறைவெய்தியது.

## குன்றக்குடி பங்குனி உத்திரம்

குன்றக்குடி ஸ்ரீ சண்முகநாதப் பெருமான் பங்குனி உத்தரப் பெருவிழா 18-3-64 தொடங்கி 27-3-64 வரை சிறப்பாக நடந்து நிறைவெய்தியது. விழா நாட்களில் திருமுறைப் பாராயணமும், திருப்புகழ்ப் பாராயணமும், வேதபாராயணமும் நடைபெற்றன.

22-3-64 ஞாயிறு வள்ளி திருக்கல்யாணம் நடைபெற்றது. அன்று இரவு காரைக்குடி இசைமுரசு மணிராசன் குழுவினரின் இன்னிசைக்கச்சேரி நடைபெற்றது. தவத்திரு அடிகளார் அவர்கள் திரு. மணிராசனைப் பாராட்டி வாழ்த்தினுர்கள்.

24-3-64ல் ஸ்ரீ சண்முகநாதப் பெருமான் தங்கக் கேடகத்தில் எழுந்தருளி பவனி வந்தார், 25-3-64 தெப்ப உற்சவம் நடைபெற்றது. 26-3-64 ஸ்ரீ சண்முகநாதப் பெருமான் திருத்தேரில் பவனி வந்தார். தவத்திரு அடிகளார் அவர்கள் முன்னின்று தேரிழுத்துச் சென்ருர்கள்.

ஏராளமான பக்தர்கள் ஸ்ரீ சண்முகநாதப் பெருமானை தரிசித்து மகிழ்ந்தார்கள்.

ஏராளமான பால் குடங்களும், காவடிகளும் கொண்டு வந்து செலுத்தினர்.

## ஹரிஜன சேவா சங்கக் கூட்டம்

திருப்புத்தூர் ஹரிஜன சேவா சங்கக் கூட்டம் 1-4-64 மாலை 4 மணிக்கு தவத்திரு அடிகளார் அவர்கள் தலைமையில் குன்றக்குடி திருவண்ணமலை ஆதீனத் திருமடத்தில் நடைபெற்றது. கூட்டத்திற்கு சுமார் 35 உறுப்பினர்கள் வந்திருந்தனர். முக்கியமான பல்வேறு தீர்மானங்கள் நிறைவேற்றப் பெற்றன. கூட்டத்திற்கு வந்திருந்த தேவகோட்டை ஹரிஜன நல தாசில்தார் திரு. கிருஷ்ணமூர்த்தி அவர்கள், சென்ற மாதம் ஹரிஜன சேவா சங்கம் நிறைவேற்றிய தீர்மானங்களுக்குத் தாம் எடுத்துள்ள நடவடிக்கைகளைப் பற்றி விளக்கிக் கூறினுர்.

சாக்கவயல் கிராமம், புதுவயல் கிராமம், பெரிய கோட்டை கிராமம், சாக்கோட்டை காலனி, குலபட்டி கிராமம், ஜெயங்கொண்டான் கிராமம், பெத்தானேந்தல் கிராமம், பள்ளத்தூர். மருதிப்பட்டி கிராமம், மிதுலைப்பட்டி கிராமம், பிரபாகர் காலனி ஆகியவற்றில் நிறுவப்பெற்ற ஹரிஜன நல சங்கக் கிளைகள் அங்கீகாரம் செய்யப்பெற்றன.

அடுத்த கூட்டத்தை காரைக்குடி சொக்கலிங்கம் சுகாதார நிலையத்தில் 30-4-64ல் நடத்துவது என்று தீர்மானிக்கப்பெற்றது.

## திருமணம்

"பெண் தன் கணவனுக்கு உணவு சமைத்துப் பரிமாறுவதோடு, அவனது உள் உணர்வையும் பக்குவப்படுத்த வேண்டும்; மனைவியின் வாழ்வியல் உணர்வுகளைக் கணவன் தூண்டிவிட வேண்டும்; கணவனின் கடமையுணர்வுகளை மனைவி தூண்டிவிட வேண்டும்"

என்று 2-4-64ல் மணமேற்பட்டியில் நடைபெற்ற திருமணத்திற்குத் தலைமை வகித்த தவத்திரு அடிகளார் அவர்கள் குறிப்பிட்டார்கள்.

குன்றக்குடி அடிகளார் உயர்நிலைப்பள்ளி உடற்பயிற்சி ஆசிரியர் திரு. எஸ். சுப்பிரமணியத்திற்கும் மணமேற்பட்டி திரு. சுப. சேது ராமலிங்கம் சேர்வை புத்திரி செல்வி உமையாம்பாளுக்கும் நடைபெற்ற திருமணத்தின் போது தவத்திரு அடிகளார் அவர்கள் மேற்கண்டவாறு குறிப்பிட்டார்கள். அவர்கள் மேலும் பேசுகையில் குறிப்பிட்டதாவது: நிலத்தில் விதையைப் போட்டால் முளைக்கும் என்பதுபோல ஒருவனும் ஒருத்தியும் கூடிவாழ்ந்தால் குழந்தை பிறக்கும். இது இயல்பு. ஆனுலும், அறிவறிந்த மக்கட்பேறே பாராட்டத்தக்கதாகும். இன்று, புதுவாழ்வு பெறுகின்ற இந்த மக்கள் அத்தகைய அறிவறிந்த மக்கட்பேற்றைப் பெற்று, பொலிவுடைய குடும்பமாகத் திகழ்ந்து வீட்டுக்கும் நாட்டுக்கும் பெருமை தேடித்தரவேண்டும் என்று வாழ்த்துகிறேம்.

தொடர்ந்து, ஆசிரியர் த. பழநிசாமி. சாமி பழனியப்பன், வித்துவான் க. கதிரேசன் ஆகியோர் மணமக்களைப் பாராட்டினர். மணமகன் அனைவர்க்கும் நன்றி கூறினுர். நண்பர்களும் உறவினர்களும் மணமக்கட்கு ஏராளமான பரிசுகள் வழங்கினுர்கள்.

(6-ம் பக்கத் தொடர்ச்சி)

வேண்டும் என்ற உணர்வு மனிதனின் இயல்பாய உணர்வு. நியாயப்படியும் அந்த உணர்வு தவறல்ல — ஆனால், பிறரும் வாழ வேண்டும் என்ற உணர்விற்கு மாறாக தன்னுடைய தன்னல உணர்வு தலைதூக்குவதே ஆபத்து. பசு வாழத்தான் செய்கிறது. நாம் கொடுக்கும் தீனியைத் தின்று புல்லை மேய்ந்து வாழ்கிறது. தன்னுடைய வாழ்வுக்குரிய அளவிற்கு எடுத்துக்கொண்ட உணவுப் பொருளில் ஒரு பகுதியை இரத்தமாக்கிக் கொள்கிறது. எஞ்சியதைப் பாலாக்கி சமுதாயத்திற்குத் திருப்பிக் கொடுத்துவிடுகிறது. அதுபோலவே, மரங்களும் தம்முடைய உயிர் வாழ்விற்குப்போக எஞ்சியதை காயாகக் கனியாகச் சமுதாயத்திற்குக் கொடுத்து விடுகின்றன. மனிதனிடத்திலும் இந்த உயர்ந்த பழக்கம் வரவேண்டும். **பசு பால் கொடுக்கும்; தென்னை காய் கொடுக்கும் என்பதுபோல மனிதன் வாழ்வு கொடுப்பான் என்கிற வழக்கு நடைமுறைக்கு வரவேண்டும்.**

இம்மூன்று ஒழுக்க நெறிகளையும் கடைப்பிடித்து ஒழுகினாலேயே ஜனநாயக சோசலிச சமுதாயத்தை உருவாக்க முடியும்.

இந்திய தேசிய காங்கிரசில் பல்வேறு கட்டங்களில் அந்தப் பேரியக்கத்திற்குப் புதிய இலட்சியங்களைக்கொடுத்துப் புத்துயிர் ஊட்டி வளர்த்தார்கள். இப்பொழுது காங்கிரசில் தோன்றியுள்ள காமராசரின் தலைமுறை ஜனநாயக சோசலிசத்தின் தலைமுறையாகும். புதிய அத்தியாயத்தை அவர் தொடங்கி வைத்திருக்கிறார். இந்த அத்தியாயத்தை நாம் எழிலுற எழுதி முடிக்க வேண்டும். அதனாலேயே நேருஜி, சோசலிச உணர்வில் வளர்ந்த அசோக்மேதா. ஜெயப்பிரகாஷ் போன்ற சிறந்த தலைவர்களின் ஒத்துழைப்பை விரும்பிப் பெற்றுள்ளார். காமராசரும் இந்திய சோசலிஸ்ட் - குறிப்பாக பிரஜா சோசலிஸ்ட் கட்சியினரை காங்கிரசுக்குத் திரும்ப வரும்படி அழைப்பு விடுத்துள்ளார் - இந்திய அரசியல் வரலாற்றை கடந்த காலக் கண்ணோட்டத்தோடு ஆராய்ந்து பார்த்தால் இந்திய அரசியல் காங்கிரசுக்கு மாற்றுக் கட்சியாக சோசலிஸ்டுக் கட்சிகள் வளர்ந்து அந்த இடத்தைப் பெற்றிருக்க வேண்டும். அப்படிப் பெற்றிருக்க வேண்டுமானால் ஆட்சிக்கு ஒரு மாற்றுக் கட்சியாக - தகுதி வாய்ந்த ஓர் எதிர்க்கட்சியாக அது வளர்ந்திருக்க முடியும். அது, தலைவர் காமராசர் குறிப்பிட்டிருப்பதுபோல மகிழ்ச்சிதரக் கூடியதாகவும் இருந்திருக்கும். நாட்டின் ஒற்றுமையுணர்வுகளும் பொருளியல் அமைப்பும் சீராக இல்லாத இந்தச் சூழ்நிலையில் தேசிய உணர்வுடைய முற்போக்கு எண்ணமுடைய எல்லா அணிகளும் ஓரணியில் நின்று திறம்படச் செயலாற்ற வேண்டியது அவசரமும் அவசியமுமான கடமை. இக்கடமையைச் செய்து முடிக்க, மனம்படைத்த அனைவரும் முன்வர வேண்டும்.

(8-ம் பக்கத் தொடர்ச்சி)

தொல்லுலகில் மலர்ந்திட்ட மலர்கள்யாவும்
சிவபெருமான் வழிபாட்டுக் குரியதாகும்
எல்லையற்ற கருணையுளத் தெம்பிரானுக்கு
எதுவுமே தீயதில்லை அடியார் தந்தால்

பொற்பாத கமலங்கள் உளத்தே வைத்து
புலனடக்கம் செய்ததனை கோவி லாக்கி
சொற்பொருளும் அணையாத தீப மாக்கி
செய்கையெலாம் சிவபூசை என்று கொண்டு
சிற்சபையில் ஆனந்தக் கூத்தாடி நிற்கும்
சிவபெருமான் பொற்பாத கமலந் தன்னை
உற்பவித்த எண்குணத்த மலராய் வைத்து
உவக்காமல் வேறெதனை ஆட்டு வோமே?

செல்லும் சிந்தைக்கிலக்கியமாய் சிந்தையெலாம்
அல்லும் பகலும் அரன்நாமம் அயராதோதி
சொல்லும்செயலும் ஒன்றாக சுதியும்நாதம்
என்றாகி
அல்லல் அறுக்கும் எம்பெருமான் அவனே
இந்தஉயிரெல்லாம்
கல்லும்புல்லும் உயிர்யாவும் காணும்பொருளும் கருதுவதும்
எல்லாம்எங்கள் இறைஎன்னும் எண்ணத்
தொடர்பால் பிணைப்புண்டு
மல்கும்கண்ணீர் விழிசிந்த மனமும்விம்ம
வாய்மவுனம்
கொள்ளச் சிவனேவடிவாகி கொண்ட
அடியார் கழல்போற்றி



(முதல் பக்கத் தொடர்ச்சி)

வாழ்க்கையில் உரிய கடமைகளைச் செய்யும்பொழுது, தன்னலச் சார்பான பலன்களில் பற்றின்றிக் கடமை வழிப்பட்டவற்றைத் தொண்டெனக் கருதிச் செய்தல் வேண்டும்.

அன்புடனும் பணிவுடனும் செய்யப் பெறுவதுபணி. அதனுல் தான் அப்பரடிகள் பணி என்றே குறிப்பிடுகின்ருர். ஈற்றில் பணிசெய்து கிடப்பதே என்கிருர். "என்"னென்று உயர்திணைக் குறிப்பிலே தொடங்கிக் கிடப்பதே என்று அஃறிணைக் குறிப்பில் முடிக்கிருர். பலனில் பற்றின்றி மரங்கள் காய்த்துக் குலுங்குவதுபோல—விலங்குகள் உழைப்பதுபோல கடமையைச் செய்யவேண்டும் என்ற குறிப்பிலேயே அப்பரடிகள் இப்படிக் குறிப்பிடுகின்ருர்.

"நங்கடம்பனைப் பெற்றவள் பங்கினன்
தென்கடம்பைத் திருக்கரக் கோயிலான்
தன்கடன்அடி யேனையுந் தாங்குதல்
என்கடன்பணி செய்து கிடப்பதே"





வெளியிடுவோர், ஆசிரியர்: ஆறு. சுப்பிரமணியன். அடிகளார் அச்சகம். குன்றக்குடி. இராமநாதபுரம் மாவட்டம். துணை ஆசிரியர்: சாமி பழனியப்பன்.